ஸ்ரீ:

# ஸ்ரீவேங்கடேச திருப்பள்ளி யெழுச்சி



ஆதி சங்கர பகவத்பாத வேத ஸபா

திருவல்லிக்கேணி :: சென்னை-5

1971] நவம்பர் வெளியீடு [ஞானயக்ஞம்

அத்திரியோ டெழுமுனிவர் யாவருமே கடன்முடித்து
இத்தரையில் கிடைக்கரிதாம் எழிலுடைய மலர் கொண்டு
சித்தமதில் உனைத்துதித்துச் சேவிக்க வந்துள்ளார்
பத்தியுடைச் சேடவரைப் பதியே நீ கண்மலராய்



ஸ்ரீ :

# ஸ்ரீவேங்கடேச திருப்பள்ளி யெழுச்சி

(துதி, சரணகதி, மங்களம், ஸ்ரீ கோவிந்த நாமாவளி)

## எண்சீர் ஆசிரிய விருத்தம்

கோசலை தவத்துரு வாகிய கோவே
கோதறு நன்மக ஞகுமி ராம
தேசுறுங் கதிரோன்செய் காலையம் பொழுதும்
சீர்த்தது பொருளெங்கும் துலக்கம துறவே
பேசரும் தேவருக் காகநாம் பேணும்
பெட்புறு கருமங்கள் புரிந்திடல் வேண்டும்
மாசறு மனிதருள் மாண்புடை யோனே
மாணிக்க மேபள்ளி யெழுந்தரு ளாயே 1

எழுந்தருள் எழுந்தருள் கோவிந்த எழிலே
எம்பெரு மான்பள்ளி யெழுந்தரு ளாயே
எழுபடை நடுங்கிடும் அரவத்தின் பகையாம்
எழிலுடைப் புட்கொடியாய் பள்ளி யெழுவாய்
கொழுவிய மலரதைக் கோலம்செய் தமரும்
கொம்பினை விரும்பிடும் நம்பியே நீதான்
அழுந்திய துயிலினில் ஆழ்ந்திட லின்றி
அளித்திட மூவுல கத்தையும் எழுவாய் 2

ஏருறும் உலகெலாம் ஈன்றருள் தாயே
இயம்பரும் உடல்வலி ஏந்தியே நின்ற
தாருறுந் தருக்கினர் மதுகைட பரைத்தன்
சதுரினல் சாய்த்தவன் மார்பெனும் மலையில்
ஏருற விளையாடும் இனியநல் மயிலே
இதயத்தைக் கவர்ந்திடும் எழிலுடை யுருவே
கோருநர் கோருதல் கொடுத்தருள் தேவி
கோலவேங் கடவன்றன் காதலி யெழுவாய் 3

தண்ணிய தாமரைக் கண்ணிணை யாளே
தாழ்விலா முழுமதி முகமுடைத் தேவே
விண்ணவர் ஏத்திடும் நான்முகன் அரனே
டிந்திரன் தத்தம தேவியர் விரும்பிக்
கண்கவர் வனப்புறுங் கடிமல ரதனல்
கழலிணை யருச்சித்து வணங்கிடு மணங்கே
நண்ணரும் வேங்கட நாயகன் விரும்பும்
நங்கையாம் அருட்செல்வி யெழுந்தரு ளாயே 4

அத்திரி முதலிய முனிவர்கள் எழுவர்
நித்திய கருமங்கள் அருமையின் முடித்துப்
பத்திசெய் தடியிணை பரிவுடன் பணிவான்
பன்னரும் மனங்கவர் பண்புடைக் கங்கை
மத்தியில் முளைத்திட்ட மலரிணைக் கொண்டு
மண்டினர் வந்தனர் மாண்புற வேதான்
நித்திய மாகவே சேடனுர் மலைமேல்
நின்றருள் பூரண எழுந்தரு ளாயே 5

வாளவர் வணங்கிடும் ஐம்முகன் அயனே
டறுமுகன் வாசவன் வந்தனர் நின்று
கானமர் கழலினல் மூவுல களந்த
கருமத்தை வியந்துமே புகழ்கின்றர் ஒருபால்
ஊனமில் மொழிகளின் தலைவனும் சேய்மை
ஓதுகின் ருன்தூய நாட்குறி நூலை
வானுற வோங்கிய சேடனுர் மலைமேல்
வந்துநின் றருளிய பூரண எழுவாய் 6

கதிரவன் கமலத்தின் கதவெனும் இதழைக்
கரங்களால் நெகிழ்த்திடக் கமழுநல் மணமும்
மதிப்பரு மனங்கவர் கமுகொடு தென்னை
மாண்புறு மரந்தரு பாளையின் மணமும்
அதிபலம் பொருந்திய அனிலனும் அவனும்
அளைந்துமே மென்மையாய் வீசுகின் றனனல்
கதியென வுயிர்கட்குச் சேடனுர் மலைமேல்
கழலிணை காட்டிய பூரண எழுவாய் 7

உயரிய கூட்டினில் ஒளிர் நிறக் கிளிகள்
உறக்கம தொழிந்துதம் விழிகளைத் திறந்து
நலமுற நீயுண்ட கலங்களில் மிகுந்த
நறுங்கன்ன லமுதொடு பழங்களைப் புசித்து
மயர்வறு மன்பர்கள் மகிழ்வுற வேதான்
மாண்டநின் திருப்பெயர் கூறுகின் றனவால்
துயரறு சுடரடி சேடனூர் மலைமேல்
தோன்றிடச் செய்தவ எழுந்தரு ளாயே 8

நிலையாக எங்குமே நிலைத்தறி யாத
நியமமார் நாரத நன்முனி நின்று
கலைதெரி யுயரிய கம்பிகள் பூட்டிக்
கவினுறும் வீணையில் கரத்தொழில் காட்டி
உலைவிலா மொழியுறு நின்சரி தத்தை
உருகிநல் லிசையெழப் பாடுகின் றனனால்
மலைவறும் சேடனூர் மாண்புறு மலைமேல்
மகிழ்ந்துமே நின்றருள் பூரண எழுவாய் 9

அருகுற்ற ஓடையில் அலர்ந்திட்ட கமல
அகட்டினில் சிறைப்பட்ட அறுபத ஈட்டம்
பருகிட்ட தேனோடு வெளிப்பட்டு நினது
பரந்திட்ட புகழினைப் பண்ணுறப் பாடித்
தெருளுற்ற மேலவர் போலவே நின்றன்
சேவடி சேவிக்கச் சேருகின் றனவால்
அருளுற்றுச் சேடனூர் அழகிய மலைமேல்
அணைந்துநின் றருளிய பூரண எழுவாய் 10

இடையர்தம் சேரியில் இல்லங்கள் தோறும்
இருங்குழ லாய்ச்சியர் தயிரினை மத்தால்
கடைந்திட வெழுந்திடுங் கனமுறு மொலியும்
கதுமெனத் திசையெங்கும் வழங்கெதி ரொலியும்
அடைவுற நின்திருச் செவிப்பொறி யதனில்
அண்ணலே யின்னமும் விழுந்திட விலையோ
படையையும் கலக்கிடும் பண்புடை நாகப்
பருவத மேலமர் பூரண எழுவாய் 11

ஆதவன் நேயமார் அம்புய மதனை
அடைந்துமே அறுபதம் அலமரல் செய்து
மாதவ நின்னிறக் குவளையோ டிகலி
மாண்புறும் வெற்றியைப் பெற்றநற் செய்தி
ஓதமார் கடலுடை யுலகெலா மறிய
ஒலியுறு முரசென முரலுகின் றனவால்
வேதங்கள் வழுத்துறும் சேடனூர் மலைமேல்
விரும்பியே நின்றருள் பூரண எழுவாய் 12

திருமகள் நாயக பெருநிதிக் கோவே
திருவடி தொழுபவர் தமக்கருள் தேவே
பெருநில உலகினில் பேசுநல் லுறவே
பெருமையை யுடையநற் கருணையங் கடலே
திருந்திய எழிலுடைச் செய்யவள் விரும்பிச்
சேர்ந்திடும் மார்புடைத் திவ்விய மூர்த்தி
திருவளர் வேங்கட நாகத்தின் தலைவா
தரையினை வாழ்விக்க எழுந்தரு ளாயே 13

அரனய னுடனுயர் சனந்தனர் முதலோர்
ஆன்றநல் சிறப்பினை அடைந்திட வேண்டி
வரமுடை அரவிந்த வாவியுள் படிந்து
வானுறுங் கோவிலின் வாயிலில் வந்து
சிரங்களில் பிரம்படி விழுதொறும் தாங்கிச்
சேவிக்க நின்கழல் நெருக்கிநின் றனரால்
வரமருள் வேங்கட மலைகிழ வோனே
வாழ்விக்க மூவுல கத்தையும் எழுவாய் 14

உயர்வற உயரிய வைகுந்த வாழ்வை
உவந்திட லின்றிநீ விரும்புமிம் மலையின்
மயர்வறு நாமங்கள் ஏழையும் மகிழ்ந்து
மாண்புடை யரன்முதல் மூவருங் கூறிச்
செயலறக் கோவிலின் வாயிலில் சேர்ந்து
சேவடிப் போதினைச் சேவிக்கின் றனரால்
அயர்வறும் அமரர்கள் அறிவரும் பெரும
அழகிய வேங்கட நாதனே எழுவாய் 15

அரன்முதல் அளகேசன் ஆதியா எண்ணும்
அரியநல் திசைக்காவ லாளர்கள் எண்மர்
சிரங்களில் கூப்பிய கரங்களைச் சேர்த்துத்
தொண்டினைப் புரியவே மண்டிநின் றனரால்
தரமுற அவரவர் தமக்குமே பணியைத்
தந்தருள் புரிந்திடத் தகையுறு தேவே
மரமெலாம் கவினுறும் மலர்களை ஈனும்
மாண்புறு வேங்கட மலைநாத எழுவாய் 16

கருடனும் சிங்கமும் கட்செவி யோடு
காயுறு யானையும் பாயுறு பரியும்
பெருமித நின்னுடைப் பேரெழில் நடையில்
பெரிதுமோர் பங்கினைப் பெற்றிடக் கருதி
அருமையாய் உயரிய பெருமையார் மலையின்
அழகிய கோவிலின் வாயில்நின் றனவால்
திருவருள் புரிந்துதம் குறையினைத் தீர்க்கத்
திருவுடை வேங்கட நாதனே எழுவாய் 17

இமையவர் தமக்குமே இன்னலை இயற்றும்
இலங்குறு கோள்களாம் ஞாயிறு திங்கள்
அமைவுறு செவ்வாயும் புதன்குரு வெள்ளி
அல்லலை மிகுத்திடும் சனிபாம்பி ரண்டும்
கமையுடை நின்னடி யார்க்கடி யாரைக்
காமுற்றுக் குற்றேவல் புரிவன வாகி
எமையுடை வேங்கட நாதநின் வாயில்
ஏருற நின்றன எழுந்தரு ளாயே 18

ஆதவன் முதலிய அரியநற் கோள்கள்
அடியவர்க் கருள்புரி யழகிய நின்றன்
பாதத்தின் பொடிகளைச் சிரங்களில் பெய்து
பண்புறு சுவர்க்கமும் மோட்சமும் விரும்பா
வேதங்கள் முறைப்பட வகுத்திட்ட கற்பம்
வேறென்று வந்துறும் என்பதோர் நினைவால்
வேதனை கொண்டுமே நின்றன பெரிதும்
வேங்கட நாதனே எழுந்தரு ளாயே 19

பெருந்தவம் புரிந்துமே சுவர்க்கமும் மோட்சப்
பெறலரும் பதவியும் பெற்றிடச் செல்வோர்
அருமையாம் வழிகளின் கடைக்கோடி யடைந்து
அழகிய நின்னுடைக் கோபுர முடியை
விரும்பியே நோக்கிநின் வியனடி தொழுவான்
விரைந்தனர் வையகம் திரும்பிட நினைவார்
அருளுரு வாகிய அண்ணலே நீநின்
அடியவர்க் கருள்தர எழுந்தரு ளாயே 20

திருமகள் நிலமகள் இருவர்க்கும் நாத
சீதமார் அருட்குண அமுதத்தின் கடலே
அருமறை அறிவரும் தேவாதி தேவே
அண்டங்கள் புகலடை ஒப்பிலா உருவே
வெருள்தரு அனந்தனும் கருடனும் விரும்பி
வேதங்கள் வழுத்திடும் பாதங்கள் வணங்கி
அருள்பெற நின்னுடை வாயில்நின் றனரால்
அழகுறும் வேங்கட நாதனே எழுவாய் 21

நாவியம் தடமதில் நளினம துடையோய்
நவையறும் ஆண்களில் நாயக மணியே
பாவிய பொருள்தொறும் பதிந்துறை பொருளே
பகரரும் வைகுந்த மாதவ தேவே
தாவியே எழுதரும் தரங்கமாம் பிறப்பைத்
தடிந்திடும் சக்கரப் படையுடைக் கோவே
தேவியும் மறுவுமார் கற்பகத் தருவே
தேசுறும் வேங்கட நாதனே எழுவாய் 22

மன்னிய மன்மதன் செருக்கினை மாய்க்கும்
மனங்கவர் மாண்புடைச் சுந்தர வடிவே
பொன்னியல் ஒளிவளர் பூமகள் குயத்தில்
பொருந்திட விழைவுறும் விழியுடை யோனே
பன்னரும் மங்களத் தன்மையோ டுற்ற
பழிப்பறும் குணங்களார் பண்புடை யுருவே
சொன்னலம் கடந்திட்ட தூயநல் புகழோய்
சேணுயர் வேங்கட நாதனே எழுவாய் 23

மண்மகள் தன்னை நீ வாழ்விக்க மதித்து
மச்சமாய் ஆமையாய்க் கேழல்சிங் கமதாய்
எண்ணரும் வாமனன் பரசுறு முனியாய்
ஏருறு மிராமனுய்ப் பலராம னேடு
கண்ணனும் ஆகவே அவதரித் தவனே
கற்கியாய் அவதாரம் கொள்ள நிற் பவனே
விண்ணவர் வணங்கிட மண்ணுற விரும்பும்
வேங்கட நாதனே எழுந்தரு ளாயே 24

தமனியக் குடம்நிறை விசும்புறு கங்கை
தண்ணிய நறுவிரைக் கலவையின் மணக்க
விமலராய் விளங்குறும் வைணவப் பெரியோர்
விரும்பியே சிரமிசைச் சுமந்தனர் வந்து
அமரரும் வைகலும் ஆதரித் தணையும்
அழகிய நின்னுடைக் கோவிலின் அகத்துன்
கமலநல் கழலிணை காணுகின் றனரால்
கருதரும் வேங்கட நாதனே எழுவாய் 25

பருதியம் செல்வனும் பன்னிறக் கதிரைப்
பரப்பியே குணதிசை உதயம்செய் தனனுல்
திருவளர் தாமரைத் தடங்களில் தங்கள்
திவ்விய இதழ்களை விரித்துநின் றனவால்
உருகிளர் பறவைகள் உயரவே பறந்து
ஒலியினைத் திசையெங்கும் நிரப்புகின் றனவால்
அருமறை வைணவர் மங்களம் அறைந்து
அணைந்தனர் வேங்கட நாதனே எழுவாய் 26

சீரிய முனிவரர் நான்முகன் முதலோர்
சிறந்தநல் சனந்தனர் யோகரே முதலாம்
கூரிய மதியினர் கூடின ராகிக்
கூர்ந்திடு மங்களக் கையுறை ஏந்தி
நேரிய மனத்தொடு கோயிலின் அருகே
நின்றனர் நின்னடிச் சேவையில் மயங்கி
மாரியைப் போலவே மகிழ்வுடன் வழங்கும்
மாண்புடை வேங்கட நாதனே எழுவாய் 27

செய்யவள் சேர்ந்துறை தூயநல் லிடமே
செயிரறு செல்வமே நற்குணக் கடலே
மய்யலாம் பிறப்பாழி கடப்பத ற்குரிய
மாண்புடைச் சேதுவே மறைமுடி யறியும்
மெய்யான பெருமையை மேவிய கோவே
மெய்யன்பர் அருந்திடும் மேலான அமுதே
பொய்யான வாழ்விற்கு மெய்யான பகையாம்
பொன்னடி வேங்கட நாதனே எழுவாய் 28

தினமுமே காலையம் பொழுதினில் எவர்தாம்
திருமலை நாயகன் திருப்பள்ளி யெழுச்சி
மனமுவந் தோதுவான் மருவுகின் றனரோ
மாண்புறும் அப்பெரி யாருடை நினைவே
கனமுறும் பரத்தையே பயனுகக்கருதும்
கருவினில் திருவுடைக் கருதருமாண்டோர்
மனமுறு முயல்வின்றி எளிதாக எய்தும்
மாண்புடைப் பரத்தின்நல் லறிவினைப் பயக்கும் 29

ஸ்ரீவேங்கடேச திருப்பள்ளி யெழுச்சி முற்றிற்று.

## ஸ்ரீவேங்கடேச துதி

### கலிவிருத்தம்

திருவின் குயத்திற் சேர்குங் குமத்தால்
உருவம் சிவப்போ டுறுங்கார் நிறத்தோய்
திருத்தா மரைக்கண் ணுடையாய் திறலே
மறுவப் பெறுவாய் மலைநா யகனே 1

நான்கா றைந்தாம் நலமார் முகத்தோர்
வான்சே ரமரர் சிரஞ்சேர் மணியே
ஆன்றே யடைந்தார்க் கன்பார் நிதியே
ஏன்றே வெனைக்கா மலைநா யகனே 2

பொழுதெல் லாம்செய் பொறுக்கா தனவாம்
வழுவோ வரையற் றமையால் விரைவில்
கழுவப் புக்கேன் காவாய் அன்பால்
விழுப்பம் விரும்பும் மலைநா யகனே 3

திருவேங் கடனே திருவள் ளியனே
அருள்நோக் கிடுவார்க் கதிகம் அருள்வாய்
பெருவே தங்கள் பரம்நீ யெனுமால்
திருவின் தலைவா பரம்வே றறியேன் 4

வேயின் குழலால் வசமே யிழந்த
ஆயர் மடவா ரணைவா னமைந்தாய்
நேயப் பலமன் மதரும் நேராத்
தூய வசுவின் சுதநீ பரனே 5

திருவார் குணமே தயர தன்றன்
அருமைக் குமரா அரும்வில் வலவா
உருவேய் ரகுநா யகனே வரதா
திருவின் தலைவா கருணைக் கடலே 6

மண்ணீன் மடந்தை மருவுங் கரத்தாய்
விண்ணின் மதிநேர் முகத்தா மரையாய்
துண்ணென் னரக்க ரிருட்டிற் கருண
எண்ணு ரிராமன் புகலாம் எனக்கே 7

திருமா முகத்தோய் திருவார் மனத்த
அருள்வாய் இன்பம் அழகா எளியாய்
திருத்தம் பியனே தீராச் சரத்தோய்
புருடோத் தமனே புகல்வே றறியேன் 8

உன்னை யொழியத் தலைவ னுளனோ
நின்னை என்றும் நினைந்தே யுளனல்
மன்னும் அரியே மலைநா யகனே
என்னை யெண்ணி யருள்வா யருள்வாய் 9

யானோ தூரத் திருந்தே யடைந்துன்
கானார் கமலக் கழல்சே வித்தேன்
கோனே நின்னை யகலாத் தொண்டாம்
வானார் வீடே யருள்வா யருள்வாய் 10

மதியேதுமிலா வடியேன் மறத்தைப்
பதியே பரிவால் பொறுப்பாய் பொறுப்பாய்
கதியாய் மக்கள் கருதும் மலையின்
நிதியா மரியே முடிமா மணியே 11

ஸ்ரீவேங்கடேச துதி முற்றிற்று.

# ஸ்ரீவேங்கடேச சரணுகதி

## திருமகள் வணக்கம்

### அறுசீர் ஆசிரிய விருத்தம்

ஏர்பூத்த உலகங்கள் ஏழுக்கும்
ஏற்றமார் இறைவி யாகிக்
கார்பூத்த வேங்கடமாம் கரியவரைக்
கிறையவனைக் காதல் செய்து
தார்பூத்த மார்புறைந்தே யவன் பொறுமை
தழைக் கச்செய் தகையார் தாயாம்
சீர்பூத்த மலராரும் தயவாதி
குணவொளிக்கே வணக்கம் செய்வாம் 1

### எண்சீர் ஆசிரிய விருத்தம்

திருவின் அன்ப கருணைக் கடலே
திகழ்வா யெங்கும் நிறைவாய் நின்றே
பொருள்கள் எவையும் அறியும் பெரும
பொருவில் வன்மை யாவும் உடையாய்
அருளார் அடியார்க் கன்பா ரரசே
அருங்கற் பகமே அனைத்தின் பயனே
வருவாய் எளிதில் வறியார்க் கெளியாய்
திருவேங்கடனே சரணம் சரணம் 2

சிலம்பின் அளவு வேயப் பெற்ற
சிறப்பார் மலர்க்குஞ் சுகந்த மளிக்கும்
வலமும் இடமும் ஒன்றுய் வழங்கும்
வரனுர் மென்மை மருவித் தோன்றும்
புலன்கள் தோய்ந்தே நுகருந் தோறும்
புதிதாய் போகம் பெரிதும் வழங்கும்
மலங்கள் மாய்க்கும் மாண்பா ரடிகள்
மலைநா யகனே சரணம் சரணம் 3

எப்பூ விடத்து மில்லா தனவாம்
எழிலார் நிறமும் மணமுங் கொண்டே
செப்பம் வாய்ந்து மேன்மேல் மலரும்
அப்போ தலர்ந்த செந்தா மரைகள்
ஒப்பா மென்றே யுரைப்பா ருரைதான்
ஓவா மடமைக் கூற்றே யென்று
செப்பும் வகையாய்த் திகழு மடிகள்
திருவேங்கடனே சரணம் சரணம் 4

பரம்நீ யெனவே பகரும் பண்பார்
புனிதக் குறியாம் பற்ப லிரேகை
வரனூர் கொடியும் குலிசப் படையும்
வானூ ரமுதக் கலசத் துடனே
தரமார் குடையங் குசமுந் தாளார்
மலருந் தருவும் சங்கா ழியுமே
திரமாய் விளங்குந் திருப்பா தமுடைத்
திருவேங் கடனே சரணம் சரணம் 5

பண்பா ருள்ளங் காலின் சோதி
பதும ராகப் பொலிவை யழிக்கும்
வண்ணப் புறமா மடியின் சுடர்தான்
வடிவார் நீலத் தொளியை மாய்க்கும்
எண்ணற் கரிதாம் எழிலார் நகமே
இந்துக் காந்த ஒளியைத் தாழ்த்தும்
மண்ணிற் பொலியும் மலைநா யகனே
மாண்பா ரடிகள் சரணம் சரணம் 6

மேனூள் இம்ப ரும்ப ரளந்தும்
கானும் மலையும் மேவா நின்றும்
தேனூர் மலராள் தேயா வன்பால்
வருடத் தேம்பும் வனப்பைப் பெற்றே
ஊனூள் மனமும் வாக்குங் கடந்த
ஒளியார் மென்மை மேவு மடிகள்
தேனூய் அன்பர்க் கினிக்குந் தேவே
திருவேங்கடனே சரணம் சரணம் 7

நளின மங்கை நிலத்தின் நங்கை
நலமார் பின்னை முதலாம் பெண்டிர்
களித்துத் தத்தங் கரபல் லவத்தால்
வருடுந் தோறும் சிவந்தே காட்டும்
ஒளியா ரடிக ளவர்தங் கரத்தின்
உருவார் செம்மை மருவும் போலும்
தெளியா ருளத்தில் மருவாத் தேவே
திருவேங்கடனே சரணம் சரணம் 8

நாவிக் கமலப் பூவிலுதித்தோன்
நலமார் கயிலை நாதன் முதலாம்
தேவர் வணங்கும் முடியின் மணிகள்
தேசார் சுடரை நீரா சனமாய்
மேவும் மாண்பார் அடியின் இணைகள்
மேலோர் வழுத்தும் மெய்யாம் பொருளே

தாவில் பதத்தைத் தந்தாட் கொள்ளும்
    தருவார் மலைநா யகனே சரணம் 9

எங்கும் நிறைந்த வெழிலார் மாலின்
    ஏற்றம் வாய்ந்த இணையில் லடிகள்
பொங்கு மின்பம் பொழியு மென்றே
    போற்றிப் புகழும் வேத முன்றன்
துங்கக் கரத்தால் சுட்டிக் காட்டும்
    துயர மறுக்கும் துப்பா ரடிகள்
திங்கள் முகத்தின் செல்வத் தேவே
    திருவேங்கடனே சரணம் சரணம் 10

போரிற் சிறந்த பார்த்தன் தனக்குப்
    போற்றும் வலவ ளுகப் பொருந்தித்
தேரின் தட்டில் திருவாய் திறந்து
    சரணு யென்னை யடைவா யென்று
நேரில் கழலை நேயத் தால்நீ
    காட்டி யதுபோல் எனக்கு மீங்குன்
சீரிற் பொலியும் வலக்கை காட்டும்
    அடிகள் திருவேங்கடனே சரணம் 11

புலையாம் பிறவி பிறந்தே னென்றன்
    பொல்லாச் சிரத்தில் புகுதற் கரிய
அலையார் மடுவின் அரவின் பணத்தில்
    அடவித் தலத்தில் திருவேங் கடமாம்
மலையின் முடியாம் மாண்பார் தலத்தில்
    மறையின் தலையில் மறுவி லன்பர்
மலைவி லுளத்தில் மருவு மடிகள்
    மலைநா யகனே சரணம் சரணம் 12

எண்ணில் லனவாய் எழிலார் மலர்கள்
    இறைந்தே கிடந்தும் வாடா திலங்கும்
மண்ணிற் பொலியும் திருவேங் கடமாம்
    மலையின் முடிக்கே யணியாய் விளங்கும்
கண்ணும் மனமுங் களிக்கச் செய்யும்
    கதியா முன்றன் கழலா ரடிகள்
திண்ண மாகத் துயரைத் தீர்க்கும்
    திருவேங் கடனே சரணம் சரணம் 13

சரணம் புகுவார் முன்னர் மூழ்கிச்
    சார்ந்தே நின்று துய்க்கச் சமையும்
தரணி யதனில் குழவி தனக்குத்
    தாயின் முலைபோல முதே யாகும்

பரம வுவமப் பொருளா மொன்றைப்
பகர்தற் கரிய பண்பா ரடிகள்
திரமாய்த் தருக்கள் சூழ்ந்தே நிற்குந்
திருவேங் கடனே சரணம் சரணம் 14

நலமார் குணங்கள் நயக்கும் பெரியோர்
நாளும் வணங்கும் நளினக் கழலும்
கலக்கஞ் செய்யும் பிறவிக் கடலைக்
கடக்கும் படிசெய் கடைக்கண் ணருளும்
துலக்கம் பெறவே தோன்றும் பெரியோன்
அலக்கண் ணறியா வழகார் முனிதான்
இலக்காய்க் காட்டும் எழிலார் கழல்கள்
இறைவா திருவேங் கடனே சரணம் 15

திருவேங் கடனே திருவின் கேள்வா
திகழும் நீதான் தேடற் கரிதாம்
கருவிப் பொருளாய்ப் பொருந்தும் போது
கருணை யாலு னருகி லுய்க்கும்
அருமைத் தாய பயனுய் நீயே
யமையும் போழ்தி லடையும் பயனும்
திருவால் மருவும் தீதில் நினக்கே
தொண்ட னுவே னுகே னெனக்கே 16

ஸ்ரீவேங்கடேச சரணுகதி முற்றிற்று.

## ஸ்ரீவேங்கடேச மங்களம்

### தரவு கொச்சகக் கலிப்பா

தாராருந் திருமகளாம் தையலினை யுகந்தவனும்
சீராரு மங்களங்கள் சிறப்பாக நிறைந்தவனும்
பாராரும் வறியவர்க்குப் பகரரிய புதையலுமாம்
காராரும் வேங்கடம்வாழ் கண்ணனுக்கே மங்களமாம் 1

திருமகளும் நோக்கிநின்று திகைப்புறவே நெறிந்தொளிரும்
புருவமார் நயனங்கள் புகலரிய எழில்காட்ட
உருவாரு முலகினுக்கே யொளியாருங் கண்ணணையான்
திருவாரும் வேங்கடத்திற் றிகழ்வோர்க்கே மங்களமாம் 2

முகிலணவும் வேங்கடத்தின் முடிவிளக்கி யணியாகும்
அகிலவுல கங்களையும் அடக்கியநல் லடியுடையான்
மகிதலத்தில் மங்களஞ்செய் பொருட்கெல்லாம் மங்களமாம்
அகிலொடு நல் லாரமுடை யழகனுக்கே மங்களமாம் 3

அவயவங்கள் ஒவ்வொன்றின் அழகென்னு மாக்கத்தால்
எவருடைய மனத்திஇனயும் எப்போதும் மயக்குகின்ற
பவமறுக்கும் வேங்கடத்தின் பதிதனக்குக் கண்ணேறு
அவமாக வழிந்தொழிந்து வகன்றிடவே மங்களமாம் 4

நித்தியனும் நிர்மலனும் நீங்காத நீள்புகழார்
சத்தியனு மானந்த சதுரப்பா டுடையவனும்
உத்தமனு மாகிநின்றே உளத்துறையு முயிராய
வித்தகனும் வேங்கடத்தை விழைவோர்க்கே மங்களமாம் 5

அறிவியல்பா யுடையானு மனந்தமதாம் வலியானும்
நெறிபொருந்தும் தலைவர்க்குந் தலைவனென நேர்ந்தவனும்
எறிகடல்சூழ் குவலயத்தில் எளிமையொடு சீலங்கொள்
வெறிகமழும் வேங்கடத்தின் வேந்தனுக்கே மங்களமாம் 6

கருதரிய பரம்பொருளும் கருத்தாரும் விருப்பமெலாம்
உருவாகப் பெறுபவனு முன்னரிய பரமாகும்
அருமையுறு மான்மாவு மாணையிடு பவனுமாகிப்
பெருமையுடை வேங்கடத்தின் பெரியோற்கே
[மங்களமாம் 7

காலந்தா னுள்ளளவுங் களைப்பின்றிச் சேவிக்கும்
மாலாரு மெய்யன்பர் தங்களுக்கு மகிதலத்தில்
மேலாகுந் தெவிட்டாத தெள்ளமுதா மேன்மையனாய்
வாலாய வேங்கடத்தில் வாழ்வோர்க்கே மங்களமாம் 8

பெருகியநற் கருணையினுல் பேசரிய நலம் பயக்குந்
திருவடியைத் தன்னுடைய செய்யதிருக் கரதலத்தால்
கருதரிய உயிர்களுக்குக் கதியெனவே காட்டுதல்போல்
மருவிநிற்கும் வேங்கடமாம் மலையோற்கே மங்களமாம் 9

அருளென்னு மமுதூறு மருமந்த நதியின்றன்
தெருளூற்ற வலையன்ன செய்யதிருக் கடைக்கண்ணின்
மருளறுக்கும் பார்வையால் மாநிலத்தை நனைக்கின்ற
திருவுடைய வேங்கடத்தின் தேவனுக்கே மங்களமாம் 10

அணிகலனு மாடையுடனாயுதமும் மாலைகளும்
பிணிக்கின்ற வெழிலதனைப் பெறுமாறு பிறங்குகின்ற
கணிப்பரிய பேரெழில்கூர் மேனியனும் கலக்கமதைத்
தணிக்கின்ற வேங்கடத்தான் தனக்கென்று
[மங்களமாம் 11

பரமபதம் தனைத்துறந்து பனிமலராள் தன்னுடனே
அரவிந்த மலர்வாவி யதன் கரையிலடியவரை

நிரந்தரமாய்க் காப்பதற்கே விளையாடல் நிகழ்த்துகின்ற
தரமுயரும் வேங்கடத்தின் தனிமுதற்கே மங்களமாம் 12
குணவாள ராமெனவே குவலயத்தார் கூறுமெழில்
மணவாள மாமுனியின் மனத்தகத்தே மன்னுவோனும்
தணவாது புவனமெலாம் தங்குதய வாளனுமாம்
கணப்போதுந் திருவகலாக் கண்ணனுக்கே மங்களமாம் 13
மன்னுபுகழ் மாதவற்கே மங்களத்தை விழைபவராம்
என்னுடைய வாசானும் எழிலாரு முன்னோரும்
பன்னரிய வாசிரியர் பற்பலரும் புகழ்ந்தேத்தும்
உன்னரிய வேங்கடத்தையுடையோற்கே மங்களமாம் 14

ஸ்ரீவேங்கடேச மங்களம் முற்றிற்று.

## ஸ்ரீ கோவிந்த நாமாவளி

ஸ்ரீநிவாச கோவிந்தா ஸ்ரீவேங்கடேச கோவிந்தா
பக்தவத்சலா கோவிந்தா பாகவதப்ரிய கோவிந்தா
நித்ய நிர்மல கோவிந்தா நீலமேகஸ்யாம கோவிந்தா
புராணபுருஷா கோவிந்தா புண்டரீகாக்ஷ கோவிந்தா
நந்த நந்தன கோவிந்தா நவநீதசோர கோவிந்த
பசுபாலக சிருஷ்ணு கோவிந்தா பாபவிமோசன கோவிந்தா
துஷ்டஸம்ஹார கோவிந்தா துரித நிவாரண கோவிந்தா
சிஷ்ட பரிபாலக கோவிந்தா கஷ்ட நிவாரக கோவிந்தா
வஜ்ரமகுடதர கோவிந்தா வராஹமூர்த்திவி கோவிந்தா
கோபீஜனலோல கோவிந்தா கோவர்த்த நோத்தார
கோவிந்தா
தசரத நந்தன கோவிந்தா தசமுகமர்தன கோவிந்தா
பக்ஷிவாஹன கோவிந்தா பாண்டவப் பிரியா கோவிந்தா
மத்ஸ்ய கூர்மா கோவிந்தா மதுசூதன ஹரி கோவிந்தா
வராஹ நரசிம்ஹ கோவிந்தா வாமனப்புருகுராமா
கோவிந்தா
பலராமானுஜ கோவிந்தா பௌத்த கல்கீ கோவிந்தா
வேணுகானப் பிரிய கோவிந்தா வேங்கடரமண கோவிந்தா
சீதாநாயக கோவிந்தா ஸ்ருதபரிபாலக கோவிந்தா
தரித்ரஜன போஷக கோவிந்தா தர்ம ஸம்ஸ்தாபக
கோவிந்தா
அனாதரக்ஷக கோவிந்தா ஆபத்பாந்தவ கோவிந்தா
சரணாகதவத்ஸல கோவிந்தா கருணாஸாகர கோவிந்தா

கமலதளாக்ஷா கோவிந்தா காமிதபலதா கோவிந்தா
பாபவிநாஸக கோவிந்தா பாஹிமுராரே கோவிந்தா
ஸ்ரீ முத்ராங்கித கோவிந்தா ஸ்ரீவத்ஸாங்கித கோவிந்தா
தரணீ நாயகா கோவிந்தா தினகரதேஜா கோவிந்தா
பத்மாவதிப்ரிய கோவிந்தா ப்ரஸன்னமூர்த்தி கோவிந்தா
அபயஹஸ்தா கோவிந்தா அக்ஷயாவரதா கோவிந்தா
சங்குசக்ரதர கோவிந்தா சாரங்ககதாதர கோவிந்தா
விரஜாதீர்த்தா கோவிந்தா விரோதி மர்தன கோவிந்தா
சாலக்ராமஹாரா கோவிந்தா ஸஹஸ்ரநாமா கோவிந்தா
லக்ஷ்மீவல்லப கோவிந்தா லக்ஷ்மணாக்ரஜா கோவிந்தா
கஸ்தூரிதிலகா கோவிந்தா காஞ்சனாம்பரதர கோவிந்தா
கருடவாஹன கோவிந்தா கஜராஜ் ரக்ஷக கோவிந்தா
வானர ஸேவித கோவிந்தா வாரதிபந்தன கோவிந்தா
ஏடு கொண்டலவாடா கோவிந்தா ஏகஸ்வரூபா கோவிந்தா
ராமகிருஷ்ணா கோவிந்தா ரகுகுலநந்தன கோவிந்தா
ப்ரத்யக்ஷதேவா கோவிந்தா பரமதயாகர கோவிந்தா
வஜ்ரகவசதர கோவிந்தா வைஜயந்திமாலா கோவிந்தா
வட்டிகாசுலவாடா கோவிந்தா வசுதேவசுத கோவிந்தா
பில்வபத்ரார்சதகோவிந்தா பிக்ஷுக ஸம்ஸ்துத கோவிந்தா
ஸ்த்ரீபும்ரூபா கோவிந்தா சிவகேஸவமூர்த்தி கோவிந்தா
ப்ரஹாண்டரூப கோவிந்தா பக்ததாரகா கோவிந்தா
நித்யகல்யாண கோவிந்தா நீரஜநாப கோவிந்தா
ஹத்தீராமப்பிரியா கோவிந்தா ஹரி ஸர்வோத்தம கோவிந்தா
ஜனார்தனமூர்த்தி கோவிந்தா ஜகத்சாக்ஷிரூபா கோவிந்தா
அபிஷேகப்பிரிய கோவிந்தா ஆபந்நிரசன கோவிந்தா
ரத்னகிரீடா கோவிந்தா ராமானுஜனுத கோவிந்தா
ஸ்வயம் பிரகாஸா கோவிந்தா ஆஸ்ரிதபக்ஷா கோவிந்தா
நித்யசுபுதா கோவிந்தா நிகிலலோகேஸ கோவிந்தா
ஆனந்தரூபா கோவிந்தா ஆத்யந்தரஹிதா கோவிந்தா
இஹபர தாயக கோவிந்தா இபராஜ ரக்ஷக கோவிந்தா
பத்மதளாக்ஷா கோவிந்தா பத்மநாப கோவிந்தா
திருமலநிவாஸ கோவிந்தா துலசீவனமால கோவிந்தா
சேஷசாயிவி கோவிந்தா சேஷாத்ரி நிலய கோவிந்தா
ஸ்ரீநிவாச கோவிந்தா ஸ்ரீ வேங்கடேசா கோவிந்தா

ஸ்ரீகோவிந்த நாமாவளி முற்றிற்று

---

விதியுடனே ஐம்முகனும் விண்கோனும் அறுமுகனும்
மதியுடன் நீ உலகளந்த மாண்பினையே பாடுகிறார்
பதி யுனக்குப் பிரகஸ்பதியும் பஞ்சாங்கம் படிக்கின்றார்
நிதி மிகுநற் சேடவரை நின்றவனே கண்மலராய்,





மலர்ந்த சிறுதாமரையும் மணந்தரவே தென்னை யுடன்
கலந்த நறு பாக்குமரம் காணகின்ற பாளைமணம்
நலந்தரவே மாருதத்தில் நன்கமைந்து வீசிய காண்
பலந்தருமா சேடவரைப் பதியேநீ கண்மலராய்

